ஆசிரியர்
மேகன் மேக்டொனால்ட்
தமிழாக்கம் அனுமிதா
படங்கள் டெட்லுவின்



பொடேடோ மனிதன் என்று பெயரிடப் பட்டவனுகு ஒரே ஒரு கண் தான் இருந்தது. அவன் முகமோ ஏறக்குறைய உருளைக்கிழங்கு மாதிரியே மொத்தையாக இருந்தது. பார்ப்பதற்கு பயங்கரமாகத்தான் இருக்கும். தவிர, அவனுடன் துரதிர்ஷ்டமும் கூடவே வந்தது. முதல் முறையாக அந்த பொடெடோ மனிதன் எங்கள் தெருவிற்குள் தனது குதிரை வண்டியில் வந்ததிலிருந்து அந்த பையன் சங்கடத்தில் மாட்டிக் கொண்டான். அவனுடைய சகோதரியின் தலையில் ஆரஞ்சு பழத்தைப் பிழிவது, சன்னலை உடைப்பது அல்லது ஆன்ஜெலோவிற்கு (அது தான் அந்த பொடேடோ மனிதனுடைய பெயர்) வெகு அருகில் சென்று, வண்டியிலிருந்து விழவைத்த உருளைக் கிழங்குகளை திருடுவது போன்ற வம்புகள் செய்தான். ஆனால், கிறிஸ்துமஸ் தினத்திற்கு முதல் நாள்  முற்றிலும் எதிர்பாராத ஒன்று நடந்தது.  அமெரிக்காவின் பழைய வரலாற்றின் (ஸ்டான்லி ஸ்டீமர் காலம்) ஒரு பக்கம் பார்க்கலாம்.  ஒரு அசிங்கமான மனிதனின் தாராள மனப்பான்மையையும் அத்துடன் ஒன்றாக உணரலாம்.

"முதலில் இப்படி தான் வந்தது", என்று தாத்தா ஆரம்பித்தார்

உருளைக்கிழங்கு மனிதனை நாங்கள் முதலில் பார்த்த நாளில், நானும், ஓடோவும, 'ஓடு ஆடு ஓடு' என்னும் ஒரு விளையாட்டு விளையாடிக் கொண்டிருந்தோம். அவனுக்கு ஒரே ஒரு கண் மட்டுமே இருந்தது. முகமோ ஒரு உருளைக்கிழங்கைப் போன்று கட்டயாக இருந்தது.





அந்த நாட்களில்,  தங்கள் சாமான்களை விற்பதற்கும், ,
செப்பனிடுவதற்கும், நிறைய மனிதர்கள் கிழக்கு தெருவிற்கு
வருவார்கள.

சில சமயங்களில் வீட்டு வாசலிலேயே கூட கடையைப்
போடுவார்கள்

‘கத்தி, கத்திரிக்கோல்’ என்று கூவுவது கேட்டபோதெல்லாம் நான், ,,அம்மாவின் பெரிய கத்திகளை பிடிங்கிக் கொண்டு, வீட்டு நுழைவாயிலில் கத்தி தீட்டுவனுக்குக் காத்துக் கொண்டிருப்பேன். கத்தி தீட்டும் இயந்திரம் சுழல்வதையும், பழைய சக்கரத்திலிருந்து பறக்கும் தீயைப் பார்ப்பதும் எனக்கு பிடித்த ஒன்று.



எல்லாவற்றிற்கும் மேலாக சுவாரஸ்யமானது, கைபிடியைச் சுற்றி இய
பெட்டியுடன் ஒருவன் வருவான். எங்கள் மலையில் கீழே இறங்கி வரும் ே
பெட்டியிலிருந்து பாட்டு வரும். அதிலிருந்து ‘பாப்’ என்று சப்தம் வந்த உடே
சிநேகிதனான ‘ராஸ்கல்’ என்கிற கிளி, தன் அலகிலிருந்து ஒரு குறி எடுத்து

முதல் மூன்று முறையும் அதில் நல்லதே இருக்கும்.



எதிர்காலத்தின் குறி முதலில் எனக்கு வந்த நாள நினைவிருக்கிறது. உண்மையில், அன்று, மூன்று முறையும், அதிர்ஷ்டமில்லை என்ற குறி கிடைத்திருக்க வேண்டும். அதே நாளில், உருளைக்கிழங்கை விற்ற முதல் நபர் எங்கள் சாலை வழியாக தன்னுடைய குதிரை வண்டியில் சவாரி செய்து கொண்டிருந்தார். அவர் குதிரையின் கட்டையை இழுத்து, சவுக்கை அசைத்து, "பொடேடோ மனிதன் வந்திருக்கிறேன்" என்று கத்தினார்.



இப்படிதான் இந்த பெயர் ஏற்பட்டது. இந்த தெருவிற்கு புதிதாக வந்த கறிகாய்-பழங்கள் விற்கும் வியாபாரி அவன். டர்னிப், ஆப்பிள், ருடாபாகா, உருளைகிழங்கு, முட்டைகோஸ் போன்றவைகள் அவனுடைய வண்டியில் அடுக்கி குவியலாக இருந்தன.. என் பெயர் பொடாடா என்று அவன் ஒரக்க கத்தியதில், என் நாய், டுகி, மிகவும் ஆவேசத்துடன் கர்ஜித்து, பாய்ந்தது; அன்று அவன் சங்கலி தப்பியது. என் சகோதரிகள் கயிறு குதித்து விளையாடிக் கொண்டே, ஒரு பாடலை ஒன்றாக முனகிக் கொண்டிருந்தார்கள். ஆனால் உருளைக்கிழங்கு வியாபாரியின் ஒற்றைக் கண்ணைப் பார்த்து அவர்கள் பயந்து வீட்டிற்குள் போய்விட்டார்கள்.





நான்கு வாழை பழங்கள் வாங்குவதற்கான பணத்தை எப்போதும் அம்மா என்னிடம் கொடுப்பார். ஆனால், அன்று ஒன்று கூட வாங்காமல் கருவிகள் வைக்கும் எங்களுடைய கொட்டகையில் போய் ஒளிந்துக் கொண்டேன். தகர கொட்டகையின் மேல் விழுந்த மழையின் சப்தத்தைக் கேட்டுக் கொண்டு அங்கேயே ஒளிந்துக் கொண்டிருந்தேன்.

வீதியில் இருந்த குழந்தைகள் பொடேடோ மனிதனைக் கிண்டல் செய்ய ஆரம்பித்தனர். அவன் வரும்போதெல்லாம், "என் பெயர் பொடேடோ மனிதன் ‘" என்று கூச்சலிட்டு, வண்டியைப் பின் தொடர்ந்து ஓடி, மரக் கிளைகளையும், கற்களையும் பின்னால் வீசினார்கள். அப்போதிலிருந்து கெட்ட காலம் தொடங்கிவிட்டதது.





முதலில், அவன் வண்டியிலிருந்து  தறசெயலாக சில உருளைக் கிழங்குகள் விழுவும், ஓடோவும நானுமாக  அந்த உருளைக்கிழங்குகளைப் பொறுக்கி எடுத்து கோட் பாக்கெட்டுகளில் மறைத்து வைத்துக் கொண்டோம். பிறகு எங்கள் கருவிகள் இருந்த கொட்டகையின் பின்னாடி , நெருப்பூட்டி குச்சியால் அவைகளை வறுத்து எடுத்தோம்.

.

நாம் இவைகளை எடுத்தே வந்திருக்கக் கூடாது இது திருட்டு தான் என்று ஓடோ சொன்ன போது, அந்த மனிதன் அரை குருடன், அதனால் நம்மை பார்த்திருக்க வாய்ப்பில்லை எனறு சொன்னேன். ஆனால் அவன் பார்த்தது மட்டும் இன்றி, என் அம்மாவிடம் “உன் பையன் தரையில் ஓடும் அணிகல்களைவிட கூட மோசமானவன் என்றும் சொல்லியிருக்கிறான்”. அதற்காக, ஒரு வாரம், ஒவ்வொரு இரவிலும், எல்லா உருளைகிழங்குகள் தோலையும்  உரிக்கும் தண்டனை கிடைத்தது.

இரண்டாவது முறை நான் இன்னொரு குறும்பு செய்தேன். என் சகோதரியின் கவனம் வேறு எங்கேயோ இருந்த போது, ஒரு ஆரஞ்சு முழுவதையும் அவளுடைய தலைமுடியில் கசக்கினேன். அதனால் அவள் கத்திக்கொண்டே வெளியே ஓடினாள். ஈக்கள் அனைத்தும் அவளது தலையைச் சுற்றி ரீங்காரம் செய்தன. பொடேடோ மனிதன், தனது குதிரை வண்டியிலிருந்து இதை எல்லாம் பார்த்துக் கொண்டிருந்தான். அதற்கும் அம்மா என்னை கோபித்துக் கொண்டாள். இருந்தும் நான் அவளை சீண்டுவதை விடவில்லை. வாய்ப்பு கிடைக்கும் போதெல்லாம், என் சகோதரியை அதை பற்றி கிண்டல் செய்த போது அம்மா ஒன்றும் சொல்லவில்லை.



இத்துடன் இரண்டு முறை பிடிபட்டு விட்டேன்.

இன்னொரு நாள், நானும் ஓடோவும்  திருட்டுதனமாக, பதுங்கி பதுங்கி மணியக்காரரின்  வீட்டிற்கு சென்றோம். அவருடைய பளபளப்பான புதிய ஸ்டான்லி காரை, கராஜ் கூரையில் இருந்த ஒரு ஓட்டை வழியாகப் பார்க்க ஏறி கொண்டிருந்த சமயம் ‘படாடா  வந்திருக்கிறேன்’ என்று அவன் கத்தாதிருந்திருந்தால் என் கால் தவறி சன்னல் உடைந்திருக்காது.

இதுதான் எனக்கு மூன்றாவது  சறுக்கு.

மரதுண்டு கடைசியில் வெளியே வந்துவிடுவது போல், “இத்துடன் இந்த துரதிர்ஷடம் முடிந்தது” என்று சொன்ன ஓடோ, குளிரும் வந்துவிட்டால்,  பொடேடோ மனிதன் வருவதும் கடினம்  என்று உற்சாகப்படித்தினான்.

பனிதுளிகளைக் கையில் ஏந்த  தெருவிற்கு சென்ற போது, டுகி வெறியுடன் கத்திக் கொண்டெ தெருவில் ஓடி வந்துக் கொண்டிருந்தது. அது அருகில் வந்ததும், தன் வாயில் பளபளவென்று  சிவப்பு  பந்து போல் உருண்டையாக ஒன்றை கவ்விக் கொண்டிருந்தது தெரிந்தது. அதன் பின்னால் வந்துக் கொண்டிருந்த பொடெடோ வியாபாரி அதை எடுத்துக்கொள்ளத்தான் வருகிறான் என்று நினைத்து, “டுகி அதை கீழே போடு, போடுகிறாயா இல்லையா” என்று கத்தினேன். அதன் அருகில் சென்று, இப்ப என் கிட்ட கொடு என்றதும், என் கையில் டுகி அதை போட்டது., பளபளவென சிவப்பில் உருண்டையாக பந்து போல் இருந்த அந்த மாதுளை பழத்தைப் பார்த்ததுமெ அது பொடெடோ மனிதனுடையது என்று தெரிந்துகொண்டேன்.





ஏற்கனவே மூன்று முறைகள் அகப்பட்டுக் கொண்டது போரும் என்று, அவனிடம் நேராக போய், அவனுடைய சீரான கண்ணைப் பார்த்தேன்.

அந்த கண் இறுக்கிக் கொண்டது; தலையிலிருந்த கம்பளி குல்லாவை அவன் பின் தள்ள, முகம் சற்றே நடுங்கியதைப் பார்த்து, பயங்கரமாக என்னை திட்டதான் போகிறான் என்று எண்ணினேன். பழத்தை அவனிடம் கொடுத்துக் கொண்டே, இது உன்னுடையதா என்று கேட்ட போது, ‘இல்லை பையா’ என முணுமுணுத்தான். சிமிட்டும் நேரத்தில் தன் கண்ணை திறந்து, மூடினான். அது உன்னுடையது என்று நினைக்கிறேன். மேலும், இனிமையான கிறிஸ்மஸ் என்று வாழ்த்தினான்.



“

மறுபடியும் தன் வண்டியில் ஏறி, சாட்டையை அடித்துக் கொண்டே, ஹீ-யா என் கத்தினான்.

குளிர்காலமும் எட்டிபார்க்க, ‘நான் படாடா மனிதன்’ என்னும் குரலை வெகு நாட்கள் வரை நாங்கள் கேட்கவேயில்லை



“திருப்பியும் சொல்லுங்களேன், தாத்தா, பொட்டேட்டோ மனிதனைப் பற்றி மறுபடியும் சொல்லுங்களேன்”. “திரும்பி அவன் வந்தானா?’

“வயதான கிழவன் அஞ்சிலோவா”? அடுத்த வசந்த காலம், பின்னர், எனக்கு நினைவு தெரிந்து அந்த கிழக்கு தெருவில இருந்த வரை, ஒவ்வொரு வசந்த காலமும், அவன் திரும்பி வந்து, எங்கள் தெருவில் பழங்கள், மற்றும் காய்கறிகளை விற்பனை செய்வான் ஒரு முறை ஒரு பெரிய, கனமான பூசணிக்காயை எனக்கு விற்றான். அவ்வளவு பெரிய பூசணிக்காயை நீங்கள் பார்த்திருக்கவே முடியாது."

“அதை பற்றியும் சொல்லுங்களேன்”. நீங்கள் சிறுவனாக இருந்த போது நடந்த வேறு எதையாவது சொல்லுங்கள்”.

“இப்போது இது போரும் . மறுபடியும் நாளைக்கு இன்னொரு கதை.”



